[30th March 1961

SRI K. VINAYAKAM : இந்த பக்கிங்ஹாம் கெனால் சீரமைப்பு செய்வதற்கு 120 லட்சம் ரூபாய் வேண்டியதாக இருப்பதால், இதற்காக ஏதாவது மத்திய சர்க்காரிடமிருந்து மான்யமாகவோ அல்லது கடனாகவோ கோர நமது அரசாங்கம் எடுத்துக் கொண்ட முயற்சி என்ன? இதை எப்பொழுது அமுல்படுத்த முடியும். இதைச் சீரமைப்பு செயவதற்கு ஏதாவது ஒரு "டார்ஜெட் டேட்" கடைசி தேதி என்று அமைத்திருக்கிறார்களா ?

THE HON. SRI P. KAKKAN : நகரத்திற்குள்ளே செய்யப்படுகிற வேலைக்கு மத்திய சர்க்காரிடமிருந்து எந்தவிதமான கோரிக்கையும் கேட்கவில்லை. பக்கிங்ஹாம் கெனால் இதரப் பகுதிகளை செப்பனிடுவதற்கு மத்திய அரசாங்கத்தை கேட்டிருக்கிறோம்.

SRI K. ANBAZHAGAN : இந்த பக்கிங்ஹாம் கால்வாயும் கூவம் ஆறும் நல்ல முறையில் விரிவுபடுத்தப்பட்டு, ஆழப்படுத்தப்பட்டு அமைக்கபபட்டால்தான் சுகாதார வசதியும் அதுபோல போக்குவரத்து வசதியும் பொதுமக்களுக்குக் கிடைக்கும் என்ற காரணத்தினால் இந்த ஆண்டிலேயே இந்த வேலை துவக்கப்படுமா ? அதற்கு ஏதேனும் உடனடியான திட்டத்தை கனம் அமைச்சர் அவாகள் கருதிக் கொண்டிருக்கிறார்களா?

THE HON. SRI P. KAKKAN : "ஹைபவர் டெக்னிகல் கமிட்டி" ரிபோர்ட்டு சமர்பித்திருக்கிறார்கள். அந்த ரிபோர்ட்டு பரிசிலனை செய்யப்பட்டு ஒரு முடிவு எடுக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : "வாட்டர்வேஸ் ஹைபவர்" கமிட்டியினுடைய சிபார்சுகள் மத்திய அரசாங்கத்திலோ, நம்முடைய அரசாங்கத்திலோ அங்கிகரிக்கப்பட்டுவிட்டதா ? அப்படியானால் அது எப்பொழுது முதல் அமுலுக்கு வரும் ?

THE HON. SRI P. KAKKAN : மத்திய அரசாங்கத்தினர் இரண்டு திட்டங்களை அங்கிகரித்து இப்பொழுது நமக்கு சாதகமாகக் கொடுத்திருக்கிறார்கள்.

(1) Terminal facilities on Buckingham Canal at Madras.

(2) Improvements to Buckingham Canal and its tow path.

இந்தத் திட்டங்கள்தான் அங்கீகாரம் பெற்றவை.

*Dam across Chinnar river*

* 1205 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Works be pleased to state whether the proposal to construct a dam across Chinnar river near Panchapalli in Dharmapuri taluk, Salem district, is included in the Third Plan?

THE HON. SRI P. KAKKAN : The list of schemes to be taken up under Third Five-Year Plan has not been finalized yet.

*National Council of Applied Economic Research (Report)*

* 1206 *Q.*—SRI T. S. RAMASWAMY : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) with reference to Question No. 146 answered on 12th August 1960 whether the National Council of Applied Economic Research have submitted their report and, if so, the salient features of the report; and

(*b*) the expenditure incurred by the Government on this enquiry by the Research Council?

30th March 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : (a) The National Council of Applied Economic Research has since submitted its report. A 'resume' of the salient features of the report[a] is placed on the table of the House.

(b) An expenditure of rupees two lakhs and fifty thousand has been incurred by this Government on the survey.

SRI T. S. RAMASWAMY : இந்த அறிக்கையில் அபிவிருத்தி திட்டத்தின்படி 1,200 கோடி ரூபாய் வருகிற பத்தாண்டுகளில் செலவழிக்க 9-30
வேண்டும் என்று இருக்கிறது. இப்பொழுது இரண்டு ஐந்தாண்டுத் திட்டத் a.m.
திற்குள்ளே வரும் திட்டங்களும், இதுவும் ஒன்றுக்கொன்று எப்படி தார தம்மியப்படுகின்றன ?

THE HON. SRI R. VENKATARAMAN : 1,200 கோடி பத்து வருஷத் திற்கு என்றால், அது பப்ளிக் செக்டார், ப்ரைவேட் செக்டார் எல்லாம் சேர்ந்தது. அப்படியென்றால், வருஷத்திற்கு அது சற்றேறக் குறைய 150 அல்லது 160 கோடி நம் ராஜ்யத்தில் இன்னும் அதிகமாகச் செய்யலாம். ப்ரைவேட் செக்டார் வரும் வேகத்தில் அது நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

SRI S. M. ANNAMALAI : இந்த அறிக்கையில் மற்ற மாநிலங் களின் பர்கேபிடா இன்கம் 261 ரூபாயாக இருக்கும்போது நம் மாநில பர்கேபிடா இன்கம் மட்டும் 227 ரூபாய்தான் என்று சொல் லப்பட்டிருக்கிறதே, அதனால், நம் மாநிலம் மிகவும் பின்தங்கியிருக் கிறது என்பது தெரியவில்லையா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பர்கேபிடா இன்கம் பாபு லேஷனைப் பொருத்தது. அப்படிப் பாபுலேஷனை வைத்துக்கொண்டு பின் தங்கியது என்று சொல்லுவது பொருளாதார தத்துவப்படி சரியான கருத் தல்ல. பர்கேபிடா இன்கம் அதிகரிப்பதைவிட இன்றைக்கு நாஷனல் இன்கம் அதிகரிக்க வேண்டும் என்பதுதான் முக்கிய குறிக்கோள். அது அதிகரித்தால், பாபுலேஷன் அதிகமாக இருந்தால் பர்காபிடா இன்கம் குறையும், பாபுலேஷன் குறைந்தால் பர்கேபிடா இன்கம் அதிகமாகும். ஆகவே, நாஷனல் இன்கம் அதிகரிக்க முயற்சிகள் செய்கிறோம்.

DEPUTY SPEAKER : There are some more questions and I hope the House will permit me to take up and dispose of those questions.

### *Mukkulathar.*

* *S.N. Q.* 9—SRI P. K. MOOKIAH THEVAR : கனம் நிதி அமைச் சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) முக்குலத்தாரைப்பற்றி தப்பிதமான கருத்தைத் தருகின்ற தவறான செய்தி 1960-ம் ஆண்டு ஜூலை மாதத்திய "சென்னைச் செய்தி யில்" (Madras Information) வந்துள்ளது அரசினர் கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா ?

(இ) அப்படியானால், இச்செய்தியைத் திருத்தும்பொருட்டு எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) The article was based on very old publications on the subject. The Government have indicated their view that it was a mistake to have reproduced these ancient writings, which (whether or not they were ever valid) have no relevance to modern life. No further action is considered to be necessary.

---

[a] Printed as Appendix VII on pages 532–539 infra.